# கவிமுளரி

மாதாந்த மின்னிதழ்

கவிதைகளின் வாசம்

கால்கோள் : 2023

25 மே 2024




**விபுலானந்தர் கலை இலக்கிய மன்றம்**

முளரி 2
இதழ் 5



# கவிமுளரி ®

மாதாந்த மின்னிதழ்

கவிதைகளின் வாசகம்

கார்த்திகை : 2023

ISSN 3021-6680

Kavi Mulari Magazine



## புதிய ஆக்கங்கள் வரவேற்கப்படுகின்றன.

படைப்புகளை அனுப்புவோர் கவனிக்க வேண்டியவை :

- கவிதைகள் மட்டுமே அனுப்பலாம்.
- ஒருங்குறியில் (Unicode font) தட்டச்சு செய்து அனுப்ப வேண்டும்.
- படைப்பாளர், படைப்பின் கீழ் தமிழில் பெயரையும் வசிப்பிடத்தையும் குறிப்பிட்டு அனுப்ப வேண்டும்.
- ஆக்கம் தனது சொந்தப் படைப்பு என்பதை உறுதிசெய்தல் அவசியம்.
- ஒவ்வொரு மாதமும் 15 ஆம் தேதிக்குள் ஆக்கங்கள் அனுப்பிவைக்கப்படல் வேண்டும்.
- ஒருவர் எத்தனை ஆக்கங்களும் அனுப்பலாம்.
- ஆக்கங்கள் அடுத்தடுத்த இதழ்களில் பிரசுரிக்கப்படும்.
- மின்னஞ்சலுக்கு அனுப்பப்படும் ஆக்கங்களே இதழுக்கு ஏற்கப்படும்.

. . . . . . . . . . . . . . . . . . . .

## ஆக்கங்களை அனுப்ப

editor2023kavimulari@gmail.com

வாசிப்பு அனுபவத்திற்கு நுழையுங்கள்...

 https://www.facebook.com/profile.php?id=61552005633300

 https://facebook.com/groups/818237263429433/

 https://kavimulari.blogspot.com



"எழுதுகோல் புரட்சி
எங்ஙனும் எழும்பட்டும்
விழுதென விடுதலை
சமூகத்தில் நிலைக்கட்டும்"

படங்களுக்காய் நன்றி நவில்கிறோம் : Google, முகநூல் மற்றும் நிது.

நற்கவிகளுக்கு
வணக்கம்,

வாழைச்சேனை பேத்தாழையைத் தளமாகக் கொண்டு இயங்கும் விபுலானந்தர் கலை இலக்கிய மன்றத்தின் முயற்சியாகக் 'கவிமுளரி' எனும் கவிதைசார் மின்னிதழ் வெளிவருகிறது.

பிரதேச கவிஞர்களுக்குக் களம் கொடுப்பதும் அவர்களின் எழுத்தாக்க முயற்சிகளுக்குக் கரம் கொடுப்பதும் எமது பிரதான அவா.

தொடர்ந்து,
7 இதழ்கள் வெளிவந்தன. அதற்கு நீங்கள் வழங்கிய ஆதரவிற்கு மேலான நன்றி. தொடர்ந்தும் ஆதரவளிப்
-பீர்கள் என நம்புகின்றோம்.

இதழில் பங்குபெறும்
கவிஞர்கள் யாவர்க்கும்
வாழ்த்துகள்.

சிலரது கவிதைகள் இடம்பெறாமல் போயிருக்கலாம். அவர்களது கவிதைகள் தொடர்ந்து வரும் இதழ்களில் நிச்சயம் வெளிவரும்.

தொடர்ந்தும் உங்கள்
பேராதரவை வேண்டும்,

உங்கள்,
-இதழாசிரியர்

*2024.05.25*

## முளரியில் வாசம் வீசும் தாதுக்கள்

கவிஞர் க.இரவிச்சந்திரன்
கவிஞர் அடியொற்றாள்
கவிஞர் கிறுக்கி ஆதிரா
கவிஞர் வாழையூர் அபி
கவிஞர் மன்னைத் தமிழ்த்தோன்றல்
கவிஞர் தமிழூராள் அனுஷ்திக்கா
கவிஞர் கௌ.நந்தினி
கவிஞர் ரவிகிருஷ்ணா
கவிஞர் வி.அபிவர்ணா
கவிஞர் மாலதி இராமலிங்கம்
கவிஞர் தமிழாதினி கிந்துயா
கவிஞர் இரவிகாந்தன்
கவிஞர் மறத்தமிழன் கலை
கவிஞர் கு.சூஜிமிதா
கவிஞர் வாழையூர் நிறோஜினி
கவிஞர் கவித்தோழி
கவிஞர் சதாசிவம் டினேஸ்காந்
கவிஞர் இ.சோபிகா
கவிஞர் இரா.நிதன்
கவிஞர் பிள்ளைக்கவி பிரசாந்




# -தமிழ்த்தாய் வாழ்த்து-

நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகுஞ்
சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதில்
தக்கசிறு பிறைநுதலுந் தரித்தநறுந் திலகமுமே
தெக்கணமு மதிற்சிறந்த திராவிடநற் றிருநாடும்
அத்திலக வாசனைபோ லனைத்துலகு மின்பமுற
எத்திசையும் புகழ்மணக்க விருந்தபெருந் தமிழணங்கே, (1)

பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருள்முன் னிருந்தபடி யிருப்பதுபோல்
கன்னடமும் களிதெலுங்குங் கவின்மலையாளமுந்துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே யொன்றுபல வாயிடினும்
ஆரியம்போ லுலகவழக் கழிந்தொழிந்துசிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே. (2)

~மனோன்மணியம் சுந்தரம்பிள்ளை.

# அனுபவித்துப் பணிசெய்வோம்

க.இரவிச்சந்திரன்
தமிழ்நாடு.



ஊன் இறுகும் உயிர் உருகும்
உழைப்பதனால் உயர் பெருகும்
யான் அறிவேன் அகம் மொழிவேன்
அதனையே வழிமொழிவேன்
ஏனிந்தப் பிறப்பென்று
எண்ணிடுவோர் கேளுங்கள்
வானுயரம் நமதென்று
வந்திடுவோர் மொழியுங்கள்...!

ஏனென்றும் எதற்கென்றும்
எண்ணாதோர் மத்தியிலே
வானுயரம் நமதென்று
வாடித்தான் போகாமல்
தேனுண்டு வாழ்வது போல்
திகைக்காமல் தேய்ந்து வரும்
ஆணுண்டு பெண்ணுண்டு
ஆளுமைகள் பலவுண்டு...!

ஏமாற்றிப் பிழைப்போர்கள்
ஏராளம் இங்குண்டு
ஏனிந்நப் பிழைப்பென்று
ஏசிடுவோர் பலருண்டு
எதுவானாலும் எதிர்த்திடுவோம்
என்றெண்ணிடுவோர் மத்தியிலே
அதுதானே தடையென்று
அஞ்சிடுவோர் அளவுண்டு...!

நாம் செய்யும் செயலொன்றே
நானிலத்தில் சரியென்ற
நாமத்துடன் உலவிவரும்
நரியர்களும் இங்குண்டு
தாம் தளர்ந்து போனாலும்
தலைமுறைகள் வாழுமென்று
தனைபுகுத்தி தடையுடைக்கும்
தகையோரும் தானுண்டு...!

வேலைதனில் அகங்காரம்
வேண்டாத ஒன்றென்று
புரியாத புல்லுருவி
புல்லரும் இங்குண்டு
தேவையினைச் சரிசெய்து
தேறுவதே நன்னோக்கம்
ஆகையினால் அயராது
அனுபவித்துப் பணிசெய்வோம்....!





# பங்குனி விருந்தாளி

அடியொற்றாள்

வறுமையும் வரட்சியும்
நாணய முகங்களாய்
வலம்வருவதினாலோ என்னமோ
வந்த இடத்திலேயே வசதியாய் - தங்கிவிட்டார்
பங்குனி விருந்தாளி

வருடா வருடம் அவர் வருகை
பங்குனி என்றே
பஞ்சாங்கம் கணித்தாலும்
அதற்கிடையில் அவசரமாய்
மாசியிலேயே மாசாக
பல்லை இழித்துக்கொண்டு-வந்துவிட்டார்

என்ன சொல்ல..? வாரி அவரளித்த-கொடைகள்
மண்ணில் இருந்து விண்ணிற்கு ஓலமிட்ட
அசரீரியாய்
“போதும்” என்ற ஒலிக்குறிப்பை
பேராசைக்காரர்களும்
தந்தி, தபால் அனுப்பும் நிலையாகிற்று

வளம் மிகு வள்ளல் - அவர் வருகையினால்
நீருக்குப் பஞ்சம் இல்லை
கடல், குளம் வற்றி
உடல் பெருக்கெடுக்கத் தொடங்கிற்று
உப்பளங்கள் உறையாமல் வாய்பிழக்கும் அளவிற்கு
உடலில் உப்பு உறைவதும் கசிவதுமாய்
நிலைமாறித் தொழிற்படத் தொடங்கிற்று

தலைவலியோ தலைவிரித்தாடி- தடையேதுமின்றி
நோய்த் தடங்களைப் பெருக்கிற்று
வெம்பி வறண்டு
காய்ந்து கறுத்து
போதுமென்ற அளவு பொறுத்து - பொசுங்கிய
வாடையும் பரவத் தொடங்கிற்று

பயணத்தில் களைக்காத பங்குனி -விருந்தாளியின்
பரம்பரையே வள்ளல்களாயிருக்க
யாரை நொந்து கொள்வது?
மார்கழியில் மைத்துனனும்
வாரிவழங்குபவர் தானே..?
இவர்களுக்கு இதுவே வேலையாயிற்று.



# தன்போக்கில்

கிறுக்கி ஆதிரா

எதுவும் தன் போக்கில் நிகழட்டும் விடுங்கள்
விடுதலை என்பதெல்லாம் - இப்போது
அவரவர் வாழ்க்கையை வாழ்தலில்தான்

சத்தியம், நியாயங்கள் எல்லாம்
யதார்த்தத்தின் திக்கில் - தாமெல்லாம்
தாமாய்த் தமக்காய் வாழ்த்தலின்
தளர்ந்த நிலையே!

சொல்லாப் பெருங்காயம்
நீண்ட மௌனம்
அமைதியான ஒரு ஆண்மகனின்
அடர்ந்த அழுகுரலின் பின்னான
திடீர் மரணத்தின் பிம்பமே!

எல்லாம், எவையும்
எமக்காய்க் காத்திராது - அதே
காத்திருக்கும் அத்தனையும்
நமக்கானவையாயும் இராது

இங்கே,
புரியாத ஒரு நிலையின்
பிரிந்திடல் வலுவென்றால்
புரிதலின் பெரும் இழிவே - பல
பிரிதலின் தொடர்புள்ளிகளாகும்

கட்டி இறுக்கிய காட்டுப் பிடியொன்றின்
பெயர் உறவு என்றால்
இறுகிய பிடியிலுண்டான தடையங்கள் - உம்
குரூரத்தை நொடிக்கொருமுறை
நினைவூட்டும்

வாழ விடுங்கள் - இது அன்றி
இங்கு எவர்க்கும்
வாழக் கற்றுக்கொடுக்கத்
தேவையில்லை.







# உன்னில் தேடுகிறேன்

வளர்கவி
வாழையூர் அபி

சுட்டெரிக்கும் வைகாசியில்
திடீரென்று கருமேகங்கள் ஒன்றுகூடி
என்னை மூடிக் கொண்டன.

கருமேகங்களை எட்டநினைக்கும்
வனாந்தர விருட்சங்கள் சூழ்ந்தபடி
தன்னந்தனியாக நான்.

காயப்பட்ட மனதிற்கு
மருந்து இட்டது போல்
வாடைக்காற்று மனதை வருடிச் சென்றது.

அழைத்து வந்திறங்கும் மழைக்கு இணையாய்
அழைக்காமல் அணைக்கும்
அபச்சையை உன்னில் தேடுகிறேன்.





# பாற்கரன் எழுவார் பெருமழைத் தருவார்

மன்னைத்
தமிழ்த்தோன்றல்
தமிழ்நாடு.

கதிரென மிளிர்வார் கனலியன் எரிப்பார்
குவலயம் சுழன்றிட வருவார்!!
கதிர்நாள் எழுவார் கன்னொளி தொழுவர்
குறையெலாம் தவிர்த்திட விழைவார்!
துதித்திட முயல்வோர் உயர்த்திடச் செய்வார்
தினகரன் ஒளியினில் உய்வார்!
அதிபரைத் துதிப்பர் ஆமயம் எதிர்ப்பார்
ஆதவன் ஒளியெனில் விதிர்ப்பர்!

விகர்த்தன னின்றி விடிதலும் இல்லை
வைகறை ஒளியெனில் முல்லை!
பகலினில் திரிந்தும் பேரொளி தருவார்
பாற்கரன் நற்றிறன் அருள்வார்!
சாகர னுதித்து செவ்வணு ஆள்வார்
சண்டனாய் அம்பரம் மீள்வார்!!
உகத்தினுள் எங்கும் உயிர்தனைக் காப்பார்
உதயனாய் உயர்வினை தீர்ப்பார்!

பல்லுயிர் வாழ்வில் பகலவன் ஒளியாம்
பண்டையத் தமிழின வழியாம்!!
அல்லவை அகற்றும் அருணனார் பொழிலில்
அனைத்துயிர் வளர்த்திடும் தொழிலார்!
உல்லரி ஓங்க ஒளியவன் உழைப்பான்
உறங்கிடின் ஒழியுமே உலகு !
நல்லவை புகழ்தல் நந்தமிழ் முறைமை
நீரகம் பேணுதல் இறைமை!!

தினமணிப் பொசுக்கத் தரணியர் அழுவார்
தினமொரு நோயினுள் விழுவார்!
இனத்தவர் நொந்தார் இருள்வலி எரித்தார்
இடரெனப் பல்லுயிர் பறித்தார்!
சனத்திரள் பதுங்க சூரியன் கொதித்தார்
சூழலைக் காத்திடப் பதித்தார்!
கனவென மழையைக் கருத்தினில் நிறைத்தார்
கதிரவன் தண்கதிர் மறைத்தார்!

அழலவன் கொதிக்க அகிலமே அலறும்
அருள்மிகும் குளிர்ச்சியோ மலரும்!
தழலென உயரும் திவாகரன் கதிரே
தரணியில் இயற்கையின் புதிரோ!
பழம்பொருள் அருளும் பெரிதென விஞ்சும்
பகலவன் வெப்பமோ துஞ்சும்!
மழலையர் முடக்கும் மாலியன் முடிவு
மரம்பல நடுதலே விடிவு!





# பாற்கரன் எழுவார் பெருமழைத் தருவார்

மன்னைத் தமிழ்த்தோன்றல்
தமிழ்நாடு.

பனிப்பகை யெரிப்பு பொறைதனில் இடரே
புவிதனில் பெரும்பிணிப் படரும்!
இனிவரும் இடரும் இருநிலம் களைய
இரவியே இன்பமும் விளைக்கும்!
வனிதையர் வணங்க வெஞ்சுடர் விலகும்
வினைப்பயன் அகன்றிடத் துலங்கும்!
சனித்திடும் மழலை செகத்தினில் மகிழ
சூரியன் வெப்பமும் அகலும்!

பதங்கனார் சூட்டில் பல்லுயிர் வாடும்
புவிஉயிர் குடிநீர் நாடும்!
வெதுப்பமும் விலக்க விரோசனன் வேண்டும்
விளைநிலம் குளிர்ந்திட வேண்டும்!
கதிரவன் ஒளியோ குவலயத் தீங்கு
காட்டினால் கார்முகில் ஓங்கும்!
விதரணம் வழங்க விரிச்சியன் நாடு
விடிவுறும் மழைவிழப் பாடு!

சங்கமும் அமைத்து சுடரவன் குளிர
செகத்தினர் மதிமிக ஒளிர்வோம்!
பங்கயன் உதிக்கப் பனித்துளி மறையும்
புடவியில் உயிர்வழிப் பறையும்!
திங்களும் விஞ்சும் தபனவன் குளிர்ச்சித்
திரண்டிட உழைத்தினி மிளிர்வோம்!
அங்கணன் நிகராம் அரியமா தொழுவோம்
அடர்வனம் படைத்தினி யெழுவோம்!

விண்மணி யெழுகை வியன்மிகும் பொழிலே
வதைத்திடும் வெப்பமோ அழுகை!
நன்னெறிப் புகட்டும் நபோமணி உணர்வோம்
நானிலப் பெருமழைக் கொணர்வோம்!
மண்வளம் பெருக மித்திரன் அழைப்போம்
மழைவளம் சிறக்கவே உழைப்போம்!
கண்மணிக் கனலி கழலடி பணிவோம்!
காட்டினைத் துணையென அணிவோம்!

பனிக்கதிர் ஒளிர்க்கும் பருக்கனார் ஒளிர்ந்தால்
புடவியுள் உயிரினம் துளிர்க்கும்!
சனபதம் சிறக்க சண்டனார் தணிய
சிறுமரம் நட்டிடத் துணிவோம்!
இனத்தவர் ஓர்மை எங்கெனும் நிலைக்க
இனனனின் வெக்கையும் கலையும்!
அனலியன் அசைவே அண்டமும் இயக்கும்
அறிந்திட நன்மையே பயக்கும்!





# எங்கே மனிதம்?

தமிழூராள்
அனுஷ்திக்கா.

தேவையென்றால் அருகில் வைக்க - மரப்
பாவையல்ல மனிதர்கள்

உடனிருக்கும் போதெல்லாம் உப்பிட்டு - நீ இனி
உரமில்லையெனத்
துப்பிட்டுப் போகும் மேதைகள்

வரவிருக்கும் போது வரவழைத்து விருந்திட்டு - பின்
புறமுதுகில்
குத்திட்டுக் கிழிஞ்சலாக்கும் அறிவாளிகள்

என்ன செய்ய?
இப்போதெல்லாம்
தேவைகளின் நிரப்பிகளாக மட்டுமே மனிதர்கள்
பிறகு எங்கு மனிதம் மலரும்?
அது தேவைகளோடு மரணித்து
பல காலங்களாயிற்று.





# நிழற் படம்

கௌ.நந்தினி
பாசிக்குடா.

வாழ்வதனைப்
புரியாத நேரமதில்
இன்பமதைச் சுவைத்தேன்
எனை ஈன்றெடுத்தவருடன்...

வாழ்வதனைப் புரிந்தவேளை
இன்பமது என்னைவிட்டு
வெகுதூரம் நின்று
நகைக்கிறது...

ஏற்றயிறக்கமதைக் கற்றுதந்த வாழ்வே
துன்பத்தையே பரிசளித்ததை
உணர்த்துகிறதே
நான் கடந்து வந்த பாதத்தடங்கள்...

உறவுகள்
என்நிழல் தொடருமெனத் தோன்றுகையில்
இதுவும் நிரந்தரமில்லையென
வேதனையைத் தருகின்றன
கடந்து சென்றவென் நினைவுகள்...

பாலிற்கு அழுமந்த சிசுவதைப் போல்
பாசத்திற்கு அழுகின்றேன்
புகைப்படத்திலிருக்கும் என் தாயிடம்,
அந்நிழல் படத்திலாவது உன்னருகில் சேர்ப்பாயா?
என்று...





# மைனாக்கள் நடாத்திய மாநாடு

ரவிகிருஷ்ணா
மட்.கிரான்குளம்.

என்றுமில்லாதவாறு
நடக்கிறது மாநாடொன்று
அதிசயித்துப் போகிறேன்
சற்று நேரத்தில்
சூரியனின் கதிரலைகள்
மெது மெதுவாக நடைபோடுகின்ற
அக்கணப் பொழுதுகளில்

சிறிது முதல் பெரிதுவரை
ஒரே பேச்சின் சாளரங்கள்
இடையிடை சண்டையும்
அன்புப் பரிமாற்றமும்கூட

ஆலமரத்தின் கிளைகளிடம்
கொஞ்சமாய்க் கதைத்து
மாநாட்டு மறுபரப்பு கேட்டுப்பார்க்க
ஒரு கோரிக்கை எழுகிறது மனதில்

மாநாட்டின் மண்டபம் அந்த ஆலமரம்தான்
சுற்றியுள்ள சூழலில் மௌனமொழி பேச்சாகிறது
எங்கிலும் நிசப்தம்
மைனாக்கள் பேசும்கீதம் அழகாயொரு ராகமாய்
இதம் தருகிறது எனக்குள்

சண்டையிட்டாற் போல்
ஒரு சங்கதியும் காணேன்
ஏற்றத் தாழ்வுகொண்டு ஏறி
மிதித்ததையும் காணேன்
முந்திநின்று மூக்கறுக்கும்
மூர்கத்தனமும் காணேன்
அவை எல்லாம் ஒன்றாய்க் கூடி
ஒரே வழியில் பயணமாகின்றன
மறுநாள் மாநாட்டுக்காய்.





# அவளும் குருதியும்

வி.அபிவர்ணா
முல்லைத்தீவு.

மாதவிடாயாக
வெளியேறும் குருதியின்
அளவு கண்டுமா
என்னை
அதிகாரம் பண்ணுகிறாய்?

கிருமி என நீ
தவிர்த்து நடக்கும் பொழுது
இதைத்தான் சொல்லத் தோன்றும்
நீயும் நானும்
கிருமிகள் தானே
எம்முடன் வாழும் உயிரினங்களுக்கு.

பிரசவ அறையில்
ஆடை உயர்த்தி
மூச்சு முடக்கி
என்னை அழுத்தி
குழந்தையை வெளியேற்றும்
பொழுதில்
பாய்ந்து ஓடும் குருதியில்
உந்தன் ஆண்மையும்
அள்ளுண்டே போனது.

சிரிக்கிறேன்
சிரிக்கிறேன்
என் உடல் பலம் நினைத்து.





# கேளாச் செவிகள்

மாலதி இராமலிங்கம்
புதுச்சேரி.

செவிகளால் கேட்டறியும் செல்வம் ஒன்று!
செல்வங்களில் தலையாயச் செல்வம் என்று
செழுமைமிகு கருத்துகளைச் செவிமடுப்பது நன்று
செந்நாப்போதர் சொல்லியே சென்றார் அன்று!

ஐம்பொறிகளையும் ஆட்சி கொள் என்றும்
ஐம்புலன்களை தனது வசப்படுத்துதல் நன்றாம்!
கேட்பதற்கு வழியான செவிகளையும் சேர்த்து
செப்பியவர் சுப்பிரமணிய பாரதியார் அன்று!

கேள்வி முயல் என்பதை அறிவீரோ?
கற்றவர்கள் சொல்லும் நூல்களின் பொருளை
கேட்பதற்கு முயற்சி செய்ய வேண்டுமென்றே
கேள்வி அறிவைப் பாடியவர் ஔவையாரே!

கேள்வி ஞானமென்பது கருவில் துவங்குமே!
கேட்டதனால் பிரகலாதன் பக்தனானான் அன்றே!
பிறர் கூறுவதைச் செவிமடுத்தலும் ஞானமாகும்!
பெறுகின்ற ஞானமதோ கற்றலையும் முந்தும்!

ஒலியதனை உட்கிரகித்துத் தகவல் சொல்லும்!
ஒத்ததாய் இரண்டுமே அதனைச் செய்யும்!
கலாசாரத்தால் பெண்களுக்கு அழகைக் கொடுக்கும்!
காதணிகளைச் செவிகளே ஆபரணங்களாக ஏற்கும்!

கேள்வி கேட்பதினால்தான் எதுவும் தெளியும்!
கேள்விகளால் நுண்ணிய அறிவும் பெருகும்!
இதுபோல கேட்டறிந்து நாம் உய்வதற்கு
இயலாது போனால் கேளாச் செவிகளாகும்!





# உழுதுண்டு ஊர் காக்கும் உத்தமன்

கிண்ணையூர்
தமிழாதினி கிந்துயா.

வானிலை பார்த்து வையகம்தனைச் செழிக்கச் செய்ய
மண்வளம் பார்த்து பயிர்தனை வளரச் செய்ய
பசுமைப் புரட்சிதனைப் பக்குவமாய்
பாருக்கு உணர்த்திடவே உதித்தானே உத்தமன்

சேறு படிந்த வயலில் ஏர்பூட்டி உழுது
மார்தட்டிப் பிறர்உயிர் காப்பவனும் அவன்தானே!
உடல் கொண்ட களைப்பினைப் பாராது
வெயில்குளித்து விதைத்திடும் வித்துவனும் அவன்தானே!

திமில் பெருத்த காளையைத் திகில்கொண்டு
பக்குவமாய் மண்ணை வளப்படுத்தி
முளைவிட்டு வளரத் தயாரான நெல்மணியை
சிதறச்சிதறச் சிந்திச் சிறக்கச்செய்யும் சிவனும் அவன்தானே!

நடும் மணிகளை நல்லுறவாய்க் கொண்டு
நாற்றிசையும் நலன்பெறச் செய்திடும் நற்றோனும் அவன்தானே!
சுற்றம்தனைக் காத்திடும் தலைவனாய்
தழைவிட்டு வளர்ந்த பயிர்களின் ரட்ஷகனும் அவன்தானே!

மண்ணில் நல்வாசம் ஊட்டி
ஆரோக்கியம்தனில் இமயம் ஏற்றி
தமிழனின் தலைப்புகழ் போற்றி
உறவாக ஊர்காத்திடும் உத்தமனும் உழவன்தானே...!





# இரண்டாயிரத்தின் குழந்தை

இரவிகாந்தன்
திருகோணமலை .

ஐம்பது வருடங்களுக்கு மேலாக
அங்கேதான் அவள் அப்பா
சென்று வந்தவர்

ஐந்தாறு வயதிருக்கும் போது
அவளுக்கு அம்மாதான்
அறிமுகம் செய்து வைத்தார்

எல்லாம் தெரிந்த அவருக்கு
அவளையும் தெரியவில்லை
அவள் பெயரும் தெரியவில்லை

ஆறு மாதத்திற்கு முன்பு
வீடுபேறடைந்த
அப்பாவையும் தெரியவில்லை
அவர் பெயரும் தெரியவில்லை
அவளுக்கு

தொலைபேசியை எடுத்தாள்
தொடுதிரையை விரித்தாள்
தொப்புள்கொடி உறவு
தொடர்புக்குள் வந்ததும்
“அம்மா..!
எனக்கென்னவோ
இவர் சாமியில்லை என்று தோணுதம்மா...!”
என்றாள் அவள்.





# அழகிய ராட்சசி

மறத்தமிழன் கலை

மணமும் நான் முடிக்க!
மகளாய் நீயும் அவதரித்தாய்!

தெவிட்டாத உன் புன்சிரிப்பு கண்டு!
என் தேகமும் துடிக்குதடி மகளே!

மல்லிகையும் சூடி நீ நடந்து வருகையில்!
என் உள்ளமும் ஆர்ப்பரிப்புச் செய்யுதே!

குடும்பங்களையும் மகிழ்விக்க!
பல வேடங்களையும் நீ தரித்தாய் மகளே!

மகளே! மொத்த கோபத்தையும்!
உன் ஒத்த உருவத்தில் கொண்டு வருவாயே!

ராணியாக நீயும் வாழ!
வீடெனும் ராஜ்ஜியம் காத்திருக்கிறது அன்பு மகளே!

பல கலைகள் நீயும் கற்று!
பார் போற்றும் மங்கையாய் வாழ்வாய் மகளே!





# அப்பா

கு.சுஜிமிதா
நாசிவன்தீவு.

அறியா வயதில்
துள்ளித் திரிந்த நமக்கு
அறிவினை
அள்ளித் தந்த
அகராதி-அப்பா!

வாழ்க்கையின்
முதற்படியைக் கடப்பதற்கு
வழிகாட்டிய
திசைகாட்டி-அப்பா!

தாழ்விலிருந்த என்னை
உலகம்
போற்றுவதற்கு
உதவிய
தூண் -அப்பா!

என் கனவை
நனவாக்கக்
காத்திருக்கும்
உன்னத
தெய்வம்-அப்பா!





# தோழியவள்

வாழையூர்
நிறோஜினி.

இப் பிறவியில் கிடைத்த
என் உன்னதமான உறவானவள்...
அன்னையின் அன்பினைக் காணாத
இப்பேதைக்கு அவள் செயல்களில்
அன்னையாக நான் உள்ளேன் என்று,
அவள் மடிகளில் தாங்கியவள் அவள்....
உன் மீதான அளவற்ற அன்பும்
ஒருவகை காதல் தானடி...
கவலை என்றாலும் அவள்
சிந்தனைகள் அரவணைத்து
தோழியவளின் தோள்களில் வசிகரிக்கும்..
பள்ளிப் பருவம் கொண்ட
நம் நட்பின் இணக்கம்
பருவகாலத்திலும் இன்றும்
இடைவிடாமல்...!
நட்பின் இலக்கணம் என்னவென்றால்
தயக்கமின்றி கூறுவேன் என்
தோழியவள் என்று...



# திங்கள்

கவித்தோழி

திங்களைப் பார்த்து
மனிதன் கேட்டான்,
"வளர்ச்சியிலும் வீழ்ச்சியிலும்
புதுப்பொலிவெனும் அழகை நீ பெறுகிறாயே!
ஆனால்,
எங்களுக்கு அப்படி அமையாதது ஏன்?"

"அது என் அமைதியின் அழகு"
என்றது திங்கள்!

திங்கள் தொடர்ந்து பேசியது,

நான் கிரகண சீற்றத்திலும்கூட
பொறுமை காக்கிறேன்!
நீங்கள்,
உற்ற உண்மை புலப்பட முன்பே
உணர்வுகளைக் கொண்டு
கொந்தளிக்கிறீர்கள்!



நீங்கள் அர்த்தமற்று
பல சமயங்களில்
வளவளக்கிறீர்கள்!
நானோ,
அனைவரது உள்ளங்களோடும்
உரையாடுகிறேன்!

உண்மையில்
நீங்கள் தனி என்பதை அறிந்தும்
தனிமை சூழுகையில் துயருறுகிறீர்கள்!
பாருங்கள்- தனிமையே என் நாளாந்த வர்ணம்!
இருந்தும் என்றேனும் நான்
சிரிக்காமல் இருந்ததில்லையே!

அன்பு ஆசை கோபம் இச்சை
என்னுள்ளும் இருக்கின்றன!
அதனால்தான் உங்கள் உணர்வுகளுடன்
என்னால் சம்பாசணை செய்ய முடிகிறது!

மனிதன் மாண்பினையும் சிறப்பினையும்
தேடி ஓடுகிறான்!
என் அமைதிக்கு அணி சேர்க்க - அவை
என்னை நாடி வருகின்றன!

செயலற்று அமைதி காப்பது தகுமோ?
என்றான் மனிதன்

நான் செயலற்று இருக்கவில்லை
இதோ உன்னுடனும் பேசிக்கொண்டு தானே
இருக்கிறேன் என்றது திங்கள்!

மனிதன் உணர்ந்தான்!
திங்களின் அமைதி
உயிர்ப்பானது!





# இஞ்சியும் பொஞ்சாதியும்

சதாசிவம் டினேஸ்காந்

கல்லே தெரியாத
கடுக்காமுனை ரோட்டில்
எல்வோட்டுக்கு பழகும்
ஏயல் பொடியோடு
ஐந்தைத்தாண்டி ஓடேலாத
அரசடித்தீவு வரும் போது
அலறியது தொலைபேசி

இஞ்சி வாங்கித்துவா
பொஞ் சாதியிடமிருந்து அழைப்பு

என்ட கலோ கேக்கமுதல்
அந்தக்கோள் கட்

ஆத்திரம் புடிச்சவள்
அவசரத்தில் இப்படித்தான்
எவ்வளவு என்டு
எடுத்தவுடன் சொல்லமாட்டாள்
அள்ளி நான் வாங்கினால்
துள்ளி எழுவாள்
கிள்ளி வாங்கினால்
பள்ளிப் பிள்ளையாய்ப்
பாடமெடுப்பாள்
தப்பாகி போகும் - பரவால்ல
சமாளிப்பம்

கட் பன்னாம கேளு செல்லம்
கதையயொண்டு சொல்லுறன்

பட்டிப்பளை றோட்டுல - பெரிய
சள்ளல் மீன் பிடிக்காங்கா
வாங்கித்து வாவென்டு
வேக்கெல்லாம் தந்தையே
அவடத்த வைச்சு
ஆளடியன் ரெண்டு
ஓடிப்போன சத்தத்துல
ஒன்ட கதை கேக்கல
இஞ்சென்டு சொன்னயே
எவளவென்டு சொல்லலல்லே
சலிக்காம சொல்லு
சறொன்டு வாங்கிவாறன்
சத்தமில்லாமல் போட்டேன்

காசிருக்குதானே
கால் கிலோ வாங்கிவா
கடுப்புல இருந்தவள்
கதைக்கமுதல் கட்

ஆமிக்கேம்படியில்
ஆட்டுப்படாமல் வெட்டி
அஞ்சாறு கடை நின்டும்
இஞ்சி கிடைக்கல்ல

நெஞ்சக் கல்லாக்கி
பிஞ்சுத் துண்டாவது
கெஞ்சிக் கேப்பம்
அச்சத்தோடு
அக்காச்சி கடைபோனா
ஆத்தாடி ஆத்தா
வெள்ள வேக்குல மேலுக்கு
மெல்லத் தெரிந்தது இஞ்சி

நூறு நானூறு
எடுக்கயா தம்பி என
ஏக்கமாய் கேட்டாள் அக்கா
காக்கிலோ கேட்டிருக்கா
முசுப்பாத்தி பன்னுறயா
என்டக்கா மூக்குலயே
தந்திருக்கும்.

கொரனாவுக்குள்ள
வேக்குல போட்டு
நாட்டுனதோட
இஞ்சி கதை முடிஞ்சென
ஏறிப்போய் கிடக்கும்
இஞ்சி விலையோட
எலக்சனுக்கு முதல்
இந்த ரோட் போடுங்க
சத்தமே இல்லாமல்
சாமித்தாறு பக்கத்தில்
பறந்தது பல்சர்.





# தனிமை

இ.சோபிகா
வவுனியா.

யாருமற்ற தனிமை,
சப்தங்கள் நின்று போன நேரம்,
பூட்டிய அறைக்கதவு,
திறந்து வைக்கப்பட்ட ஜன்னல்,
நானே தயாரித்துக் கொண்ட தேநீர்,
வரிசையினிடையில் எழுமானமாய்
எடுத்துக் கொண்ட புத்தகம்,
என்றோ ஒருநாள் நானெழுதிய
பழைய நாட்குறிப்பு,
இவை போதுமாய் இருந்தது
இப்போது இந்த தனிமை தீர்வதற்கு
கத்தி அழவும், பிடிவாதமாய்
சமாதனப்பட்டுக் கொள்ளவும்,
ஏதோ ஒன்றை
நினைத்துச் சிரிக்கவும்,
சீக்கிரமே பழகிக் கொண்டேன்
இப்போதெல்லாம் இந்த தனிமை
பிடித்திருக்கிறது,
ஒரு வகையில் இவையெல்லாம்
நான் தொலைத்த சுதந்திரம் என்பேன்...





# நிலை மாற்றம்

இரா.நிதன்
மட்டக்களப்பு.

புத்தகம்
சுமக்கும் - இவன்
கைகள் என்றுதான்
பெத்தவள்
நினைத்திருப்பாள்
இந்தப் பொல்லாத
உலகம்
என்ன
செய்ததோ...?

ஏங்கித்
தவிக்கும்
மனதின்
நிலையை
ஏன் தான்
மனித உலகம்
மறந்து
போனதோ...?

காரணம்
இல்லாமல்
காலம்
கைவிட்ட நிலையில்
அவனின்
கைகள்
குப்பைப் பைகள்
தூக்கும் வரைக்கும்
வீணாகச் சூழ்ச்சிகள்
செய்ததோ...?

வேண்டாமென்று
என்னதான்
சொல்லித்
துடித்தாலும்
வேண்டுவதுதான்
கிடைத்து
விடப்போகிறதோ?
காசைத்
தேடும்
இவ்வுலகில்...



# நம் காதல்

கிண்ணையூர்
பிள்ளைக்கவி பிரசாந்.




சங்கத்தில் இருந்து
சரித்திரம் வரை
காலூன்றிய காதல்
ஐந்நிலத்திலும் ஐயுடன்
தளைத்த காதல்

சங்கில் உயிர்க்கும் முத்துக்களாய்
நெஞ்சில் உதித்த காதல்
காலங்கள் பல கடந்தும்
காவியமாய் இங்கு
விரிந்த காதல்

அன்பில் புணர்ந்து
நினைவுகளின் இருத்தலால்
ஊனுயிரில் ஊடல்கொண்டு
பிரிவுகளில் இரங்கவைத்து
வாழ்வில் என்றுமே உடன்போகும்
வானாய் உயர்வு கொள்ளும்
இந்தக் காதல்

வறண்ட உணர்வுகளை
வற்றாத அருவியாக்கும்
அற்புதமும் காதல்

கூடலில் மட்டுமன்றி
வாடலிலும் வந்து வரம்தரும்
வேதியல் மாற்றமும் காதல்

வாழும் மட்டும் காதலித்து
வாழ்ந்த பின்னும் வேராகினால்
அகிலத்தில் அழியாது
சரித்திரமாகும் நம் காதல்.





# -தமிழ்மொழி வாழ்த்து-

வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி
வாழிய வாழிய வே!

வான மளந்த தனைத்தும் அளந்திடும்
வண்மொழி வாழிய வே!

ஏழ்கடல் வைப்பினுந் தன்மணம் வீசி
இசைகொண்டு வாழிய வே!

எங்கள் தமிழ்மொழி! எங்கள் தமிழ்மொழி!
என்றென்றும் வாழிய வே!

சூழ்கலி நீங்கத் தமிழ்மொழி ஓங்கத்
துலங்குக வையக மே!

தொல்லை வினை தரு தொல்லை யகன்று
சுடர்க தமிழ்நா டே!

வாழ்க தமிழ்மொழி! வாழ்க தமிழ்மொழி!
வாழ்க தமிழ்மொழி யே!

~சுப்பிரமணிய பாரதியார்.



கவிதை
உயிர்ப்பின்
தொழில்.

—காரிருளன்.




ISSN 3021-6680 Kavi Mulari Magazine





KaviMulari KaviMulari KaviMulari KaviMulari KaviMulari KaviMulari KaviMulari KaviMulari KaviMulari